# கொங்கு

## திங்கள் இதழ்

ஆசிரியர்: புலவர் செ. இராசு

வைகாசி 2002] 25 காசு [மே 1971





பூ வேலையுடன் கூடிய கிரந்த எழுத்துகளில் எழுதப்பட்ட பல்லவ இராஜசிம்மனின் பட்டப் பெயர்கள்.

காஞ்சி கைலாசநாதர் ஆலயக் கல்வெட்டு.

## கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை அறிமுக இதழ்

# கொங்கு

சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின் றுல்—உலகே.

தேனீ 5 (15-5-71) தேனடை 1

## வணக்கம்

ஒரு நாட்டின் சிறப்புக்கு அதன் தொன்மை வரலாறு அடிப்படையாகும். சங்க இலக்கியங்கள் ஏராளமான செய்திகளைத் தந்தாலும், உண்மையான வரலாறு காண, கல்வெட்டு மற்றும் புதை பொருட் சான்றுகள் இன்றியமையாதன. தொல்லியல் அறிவும், பழைய எழுத்துப் பயிற்சியும் பலருக்கும் கற்றுக் கொடுக்கப் படாததால், இவை பெரிய புதிராகக் காட்சி அளிக்கின்றன.

அக்குறைபாடு நீங்க தமிழ்நாடு அரசின் தொல்லியல் துறை ஒரு "பயிற்சிப் பாசறை" நடக்கிறது. அது பற்றிய முழுவிவரம் உள்ளே காண்க. பயிற்சிப் பாசறையில் பள்ளி, கல்லூரி ஆசிரியர்கள் கலந்து பயன் பெருகின்றனர். பல மாணவர்களுக்கு பரப்ப முடியும் என்பதாலேயே ஆசிரியர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்கள்.

அடுத்த பயிற்சிப் பாசறை ஆசிரியர்களோடு நில்லாமல், எல்லாப் பாதையினரிலும் ஆர்வமுள்ளோரை அனுமதிக்கும் வகையில் இருக்கலாம். கோயில் நிர்வாக அதிகாரிகளுக்குக் கட்டாயப் பயிற்சி அளிக்கவேண்டும்.

அடுத்துப் பொதுப் பணித்துறைப் பொறியாளர்கள். நிலத்தை அதிகமாகத் தோண்டும் வாய்ப்புள்ளவர்கள் அவர்களுக்கும் தொல்லியல் அறிமுகப்படுத்த வேண்டியது மிகவும் இன்றியமையாதது.

பொறியியல் கல்லூரியில், பொதுவியல் பாடத்திட்டதிலேயே தொல்லியலைச் சேர்ப்பது உத்தமம்.

பாசறை நிறைவு விழா மே மாதம் 26-ம் நாள் சென்னையில் சிறப்பாக நடைபெறும். அடுத்த கொங்கு இதழ் விழாச் சிறப்பு மலராக வெளிவரும்.

—ஆசிரியர்

தொல்லியல்

# நாமக்கல் குகைத்தளி

இரா. நாகசாமி M.A.

தமிழ் மூதாட்டி ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்து அழியாப் புகழ் எய்தியவன் அதியமான் நெடுமான் அஞ்சி. அவன் தகடூரைத் (தற்காலத் தர்மபுரி) தலைநகராகக் கொண்டு ஆண்டவன். அவன் ஆண்ட பகுதியை வடகொங்கு என்றும் குறிப்பர். அப்பகுதியில் நாமக்கல் என்ற மலையும் அதைச் சார்ந்த ஊரும் உள்ளன. அவ் வூருக்கு 'ஏழூர் நாட்டு திரு ஆரைக்கல்' என்ற பெயர் பண்டைய கல்வெட்டுக்களில் காணப்படுகிறது.

*பெயர்க் காரணம்* : ஆரை என்பது ஒரு வகைக் கோரையைக் குறிக்கும். இம்மலையில் ஆரைப்புல் அதிகம் வளர்ந்திருந்தது. போலும். எனவே இப்பெயர் பெற்றிருக்கலாம். ஆரை என்பது கோட்டை மதிலைக் குறிக்கும் என்றும் திரு ஆரைக்கல் என்பது கோட்டை மதில் சூழ்ந்த மலையைக் குறிக்கும் என்று பொருள் கூறுவாரும் உளர். ஆரைக்கல் என்பது நாமக்கல் என்று நாயக்க மன்னர்கள் காலத்திலிருந்து திரிந்து வழங்குகிறது.

ஆரைக்கல் என்ற சொல்லின் முன்னிரு எழுத்துக்களான ரகரமும், ஆகாரமும் இடம் மாறிப்பேச்சு வழக்கில் ராயக்கல் என்று வழங்கிப் பின்னர் ராமக்கல் ஆயிற்று. இன்றும் நாட்டுப்புற மக்கள், ராமக்கல் என்றே பேசுகின்றனர். ராமக்கல்லின் திருத்திய வடிவமே நாமக்கல்.

இந்த மலையில் இரண்டு குகைக்கோயில்கள் உள்ளன. ஒன்று அரவணைதுயின்ற அண்ணலாகக் காட்சியளிக்கும் பள்ளிகொண்ட பெருமாள் கோயில். மற்றொன்று இரணியனை வீழ்த்திய நரசிம்மன் கோயில் இரண்டும் மிகப் பழமை வாய்ந்த கோயில்கள்தான். அரவணை துயின்ற பெருமாள் கோயிலில் பாறையைச் செதுக்கிக் குகைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. அதன் கருவறையில் இரண்டு கரங்களோடு திருமால் பள்ளி கொண்ட காட்சியை காணலாம். அவரைப் போற்றும் நிலையில் பல தெய்வங்கள் சுற்றி நிற்பதைக் காணலாம்.

---

*இக்கட்டுரை ஆசிரியர் தமிழ் நாடு அரசின் தொல்லியல் துறை இயக்குனர் ஆவர்.*

பண்டைய கல்வெட்டுகள். இக்கோயிலில் பண்டைய கல்வெட்டுக்கள் உள்ளன. இவைகள் வரலாற்று முக்கியம் வாய்ந்தவை. இவற்றில் நான்கு சமஸ்கிருத செய்யுட்களாக உள்ளன. இவற்றில் சில பகுதிகள் சிதைந்துள்ளன. முதல் கல்வெட்டு "அதியர் குலத்தைச் சேர்ந்த குணசீலன் என்ற மன்னன் அதியநாத விஷ்ணுகிருஹம் என்ற இக்கோயிலை விஷ்ணு கோயிலாகச் செய்வித்தான்" என்று குறிக்கிறது. இரண்டாவது கல்வெட்டு "புகழ் வாய்ந்தவர்களின் மகள் வழிவந்த குலத்தவனும் அதியேந்திரர்களில் முதன்மையானவனும் ஆன சோமன்" என்று குறிக்கிறது. மூன்றாவது கல்வெட்டு 'அதியர் குலத்தில் சிறந்தவனும் நற்செய்கையுடையவனுமான மன்னனால் இவ்வதியேந்திர விஷ்ணு கிருஹம் என்ற கோயில் செய்யப்பட்டது' என்று உள்ளது. இக்கல்வெட்டுக்களிலிருந்து இக் குகைக் கோயிலைத் தோற்றுவித்தவன் அதியர் குலத்தில் வந்த குணசீலன் என்ற மன்னன் என்று அறிகிறோம். இவன் மற்றொரு அரசனின் மகன் வழியில் முதல்வன் என்றும், சோமன் என்று பெயர் கொண்டவன் என்றும் கொள்ள முடிகிறது. இவனுடைய அன்னையின் தந்தை சிறந்த மன்னனாக இருந்திருக்க வேண்டும். அவன் யாரென்று தெரியவில்லை, ஆயினும் அவன் யாரென்று ஊகிக்க இடமிருக்கிறது. இக்கோயிலில் இம்மன்னனுடைய இன்னும் பல பட்டப் பெயர்களும் பொறிக்கப்பட்டுள்ளன. உத்பலகர்ணிகன், நரவாகனன், மதனவிலாசன், மானசாரன், நயபரன், நரதேவன், பிருகிருதிபிரியன், உதாரசித்தன், விமல்சரிதன் என்று அவை குறிக்கின்றன. இவை

---

## தேவாரப் பாடல் பெற்ற ஊர்கள்,

கொங்கு நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற ஊர்கள் ஏழு உள்ளன. கரூர், வெஞ்சமக்கூடல், கொடுமுடி, அவிநாசி, பவானி, திருச்செங்கோடு திருமுருகன்பூண்டி ஆகியவையே அவை.

*ஆதி கருவூர் அணிவெஞ்சை மாக்கறைசை*
*நீதி அவினாசி நீள்நணா - மேதினியின்*
*தஞ்சமாம் செங்குன்றூர் தண்முருகன் பூண்டிதமை*
*நெஞ்சமே நித்தம் நினை*

என்று பழம்பாடல் ஒன்று கூறுகிறது. கறைசை என்பது திருப்பாண்டிக் கொடுமுடியையும், நணா என்பது பவானியையும் சுட்டும்.

—கொங்கன்

---

காஞ்சி கைலாயநாதராலயத்தைத் தோற்றுவித்த ராஜசிம்மனின் பட்டப் பெயர்களையே நினைவூட்டுகின்றன. இக்கல்வெட்டுக்கள் பல்லவ கிரந்தத்தில் உள்ளன என்றும், இவற்றின் அமைதி இராஜ சிம்மனின் கல்வெட்டுக்களையே ஒத்திருக்கின்றன என்று ஆராய்ச்சி யாளர் குறிக்கின்றனர்.

*போரொலிக்குப் பதில் கலை ஒலி:* பல்லவர், பாண்டியர், சாளுக்கியர் முதலியோரின் போர்களில் சிக்கி அல்லலுற்று வந்த தமிழகத்தில் சமாதானத்தை நிலைநிறுத்திய பெருமை பல்லவ மன்னன் இராஜசிம்மனையே சாரும். அவன் காலத்தில் போரொலிக்குப் பதிலாக சிற்பிகள் கலைக்கு ஆற்றிய கல்கல் என்ற ஒலி தமிழக மெங்கும் ஒலித்தது. பாண்டிய நாட்டில் கழுகுமலையில் ஒப்பற்ற கற்கோயில் தோன்றியது இக்காலத்தில்தான். இவன் தன் மகளைப் பாண்டிய மன்னனுக்குக் கொடுக்க அவனுக்குப் பிறந்த மகன் ராஜசிம்ம பாண்டியன் என்று பட்டம் பூண்டதைக் காண்கிறோம்.

அக்காலத்தில் அதியர்களும் கங்கர்களும் பல்லவர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். எனவே நாமக்கல்லில் குறிக்கப்படும் குணசீலன் என்ற மன்னன் பல்லவர்களின் மகள் வழியைச் சார்ந்திருக்கவேண்டும். குணசீலனின் அன்னை பல்லவ இராஜசிம்மனுடன் பிறந்த தேவியாயிருக்கலாம். நாமக்கல் கோயிலை ஆராய்ச்சியாளர் பல்லவ ராஜசிம்மன் காலத்தைச் (கி.பி. 700-730) சேர்ந்தது என்று குறிக்கின்றனர்.

இக்கோயிலில் உள்ள மற்றொரு கல்வெட்டு, மதுகைடபர்களை அழித்த திருமால் பள்ளி கொண்ட கோயிலில் அப்பெருமானைப் போற்றும் மார்க்கண்டேயர், மகரிஷி, பர்ணன், வருணன், பிரம்மன், ஈசன், தக்ஷன், சசி, சூரியன், தும்புரு, நாரதன், குரு, பிருகு, சார்ங்கி, கௌமோதகி சக்கரம் நந்தகன், பாஞ்சசன்யன் முதலியோர். இக்கோயிலைச் செய்தவருக்கு மங்கலம் நல்கட்டும்'' என்று குறிக்கிறது. இதில் குறிப்பிட்டுள்ள அனைவருமே, இக் கோயிலில் உள்ள சிற்பத்தில் செதுக்கப்பட்டுள்ளது மிகவும் சிறப்பாகும்.

இக்கோயிலில் மற்றொருபுரத்தில் உள்ள நரசிம்மரின் ஆலய மும் இதே காலத்தில் குடைவிக்கப்பட்டதுதான். இதில் அதிய மான்களின் சிறந்த கலைக்கு எடுத்துக்காட்டாக நரசிம்மர், திரிவிக்ரமர், பூவராக மூர்த்தி, ஆதிநாதர் முதலிய சிற்பங்கள் உள்ளன. தமிழகத்தில் மற்றெங்கும் காண முடியாத மூர்த்தி வடிவங்கள் இவை. 1200 ஆண்டுகளுக்கு முன்னர் தோற்றுவிக்கப் பட்ட இவை இன்றலர்ந்த மலர்கள் போல் திகழ்வதைக் காணத் தான் வேண்டும், கண் பெற்ற பெருமையை அடைய வேண்டும் என்றால்!

*

# ஒளி ஒரு புதிர்

கொண்டல். சு. மகாதேவன் BSC, MA.,

'ஒரு நெல் குத்தினேன், ஊடெல்லாம் உமியாச்சு' நாம் எனக் குழந்தைகள் விடுகவி கூறுவதை நாம் அறிவோம். ஆம், ஓரிடத்திலே விளக்கேற்ற வீடெங்கும் ஒளி பரந்து படிவதை விளக்க முயன்ற அறிவியல் உள்ளங் கொண்ட குழந்தைகள் நெல்லிலிருந்து 'உமித்துகள்' பாய்ந்து பரவுவது போன்ற விளக்கிலிருந்து 'ஒளித்துகள்' ஓடிப்பரவுகின்றது என்று முடிவு செய்தனர்!

உயிரின் முயற்சியால் எழும் 'ஒலித்துகள் (Sound Corpuscles) உரத்திலும் கழுத்திலும், உச்சந்தலையிலும் மோதிப் பின்னர் உதடு, நாவு, பல் அண்ணம் ஆகியவற்றின் தொழிலால் வெவ்வேறு எழுத்தாக ஒலிக்கின்றது என்ற ஒரு 'ஒலித்துகள்' கொள்கையையும் (Corpusular theory of sound) நன்னூலர் உருவாக்கிச் சென்றதை நாம் அறிவோம்,

விட்டெறிந்த பந்து சுவரில் பட்டு மீள்வது போல் வழவழப்பான பரப்பில் ஒளிபட்டு மீள்வதைக் கண்ட ஐசக் நியூட்டனும் (Isaac Newton) ஒளி சிறு சிறு பந்துகளாக துகள்களாக பாய்ந்து அதே வேகத்தில், அதே திசையில், வேறு விசைகளால் தூண்டப் படாத வரையில் சென்று கொண்டே இருக்கின்றது. என்று முடிவு செய்தார், இதனையே நியூட்டனின் 'துகள் ஒளிக் கொள்கை' (Corpuscular theory of light) என்று உலகம் உச்சி மேல் கொண்டு ஆடிக் கொண்டிருந்தது.

நிழல் வீச்சு, ஒளி மீட்சி, ஒளிக்கோட்டம் ஆகிய ஒளியின் செயல்களுக்கு இக்கொள்கை, விளக்கம் தருகிறது. என்பது உண்மையே! ஆனால், ஒளிக்கு இந்தப் பண்புகள் மட்டுந்தானா இருக்கின்றன? இன்னும் எத்தனை எத்தனையோ பண்புகளெல்லாம் உள்ளனவே! அவற்றை அந்தத் 'துகள் ஒளிக் கொள்கை' விளக்க முடியாமல் பின்வாங்கியது எடுத்துக்காட்டாக: தடித்த ஒரு சண்டு வீசும் நிழல் இருண்டு தெளிவாகத் தோன்றினாலும் மெல்லிய தொரு கம்பியின் நிழல் மங்கித் தெளிவில்லாமல் போய் விடுகிறது! நேர் கோட்டில் செல்லாமல் ஒளி வளைந்து திரும்பினால் தான் இது முடியும்;

நியூட்டனுக்கு நெடுங்காலத்திற்கு முன்னரேயே தமிழ் நாட்டு மாணிக்கவாசகர், 'இல் நுழை கதிர்,' பற்றிய சோதனையில் ஈடுபட்டிருக்கின்ருர் என்பது இன்றைய "பேடிக்கல்வி பயின்றுழல் பித்தர்கள்' பலருக்குத் தெரியாது! நுண்ணிய துளை வழி நுழைந்து வெளியேறும் கதிரொளி நேர்கோட்டில் செல்லாமல் நியூட்டனை ஏமாற்றி விட்டு விசிறி போல் பரவி விரிந்து விடுகிறது. ஒரு துளை வழி வேளியேறிச் சென்று வீழும் ஒளி தெளிவான வட்டமாக இருப்பதைக் காண்கின்ருேம். ஆனல், துளையானது ஊசித்துளை (pin hole) போலச் சிறிதாக இருந்தால் வீசப்படும் ஒளி வட்டம் தெளிவாக இருப்பதில்லை. ஒரே மைய்யத்தைச் சுற்றி ஒன்றுக்கு வெளியே ஒன்ருக மாறி மாறி அமைந்த ஒளி வளையங்களும் இருள் வளையங்களும் கொண்டு தோன்றுகிறது. ஒளியின் விளிம்பு வளைவதால் இந்தப் பண்பினை ஏற்படும் விளிம்பு விளைவு (diffraction) என்று நாம் சொல்கிருேம்.

இத்தகைய ஒளி வட்டங்கள் இரண்டினை ஒன்றின் மீது ஒன்று விழும்படி செய்தால் சில ஒளி வளையங்கள், சில ஒளி வளையங்களுடன் சேர்ந்து தடிக்கின்றன. சில ஒளி வளையங்கள் சில வளையங்களுடன் குறுக்கிட்டு ஒன்றை ஒன்று இல்லாமல் சேய்து விடுகின்றன. இதனையே நாம் குறுகிடுதல் (Interference) என்கிருேம்.

ஒளி தனித் தனித் துகளாக இருந்தால் இந்தக் குறும்புகளை அது செய்ய முடியாது! நீயூட்டனின் 'துகளொளிக் கொள்கை குறையுடைத்து என்பதை உலகம் உணர்ந்தது. இருந்தாலும் நியூட்டன் தனது கொள்கையை உறுதியானது என்று பிடிவாதமாகக் கூறிக் கொண்டிருந்தார்.

அலை ஒளி கொள்கை

நீர் பரப்பில் ஒரு புள்ளியில் அதிர்ச்சியை உண்டாக்கினல் வட்டமான அலை விரிந்து பரவுவதைக் காண்கின்ருேம். விரிந்து பரவுகின்ற அலை முகத்தின் (wave front) ஒரு புள்ளியை எடுத்துக் கொண்டால் அது நேர்க் கோட்டிலேயே முன்னேறுவதைக் காணலாம். ஒளியின் நேர் கோட்டுச் செலவிற்கு (Rectilinearpropagation) விளக்கம் ஒளியானது அலையாகப் பரவினுலும் கிடைக்கும் என்று ஏற்படுகிறது! அதே சமயத்தில் சிறியதொரு தடையைக் கடந்து முன்னேறும் அலைமுகம் இரு விளிம்புகளிலும் வளைந்து விரிவதையும் காண்கிருேம். ஒளி அலையாகப் பரவினல் சிறியதொரு கம்பி வீசும் நிழல் தெளிவின்றி மறைவதற்கும் விளக்கம் கிடைத்து விடுகிறது.

## அருவி

தண்ணீர் ஓடைகளிலோ, ஆறுகளிலோ உயரமான இடத்திலிருந்து செங்குத்தாக கீழ் விழும் பகுதிகளை அருவிகள் என்கிறோம். தேனருவி, ஐந்தருவி போன்றவை.

அருவிக்கு இணையான ஆங்கிலச் சொல் water falls என்பதாகும். தமிழர்கள் தமிழை மறந்து விட்டு, ஆங்கிலச் சொல்லிற்கு இணையாக மொழி பெயர்த்ததால் வந்த சொல் நீர் வீழ்ச்சி ஆகும் நீர் வீழ்ச்சியை விடுத்து அருவி என்ற பழைய சொல்லைப் பயன்படுத்துவதே பொருந்தும்.

அலைமேடுகள் (Crests) ஒன்றுடன் ஒன்று சேர்ந்து பெரிதாவதையும் காண்கின்றோம். ஓர் அலைமேடு ஓர் அலைப் பள்ளத்துடன் (tirough) சேர்ந்து அலையே இல்லாமல் செய்து விடுவதையும் காண்கின்றோம். ஒளி வளையங்கள் ஒலிவளையங்களுடன் கூடி இணை இணையான வளைவு வரிகள் (diffracton bands) உண்டாவதற்கும் விளக்கம் கிடைத்து விடுகிறது! எனவே அலை ஒளிக் கொள்கை wave theory light) ஒன்றைக் கிறித்தியன் ஐகன் (Christian Hygen) என்பவர் நீண்ட கால ஆராய்ச்சிக்குப் பின் உருவாக்கினர். அறிவியல் உலகம் இக்கொள்கையைப் பாராட்டி ஏற்றுக் கொண்டது.

*உலகை தாங்க ஓர் 'ஆதிசேடன்*

அலைகள் பரவுவவதற்கு நீர் அல்லது காற்று போன்ற ஓர் இடையம் (Medium) இருத்தல் வேண்டுமென்று சிலர் எண்ணத் தொடங்கினர். ஈதர் (Ether) என்ற ஒருபொருளை எங்கும் பரந்து நீக்கமற நிறைந்துள்ளதாகக் கற்பித்துக் கொண்டனர். உலகத்தை தாங்குவதற்கு ஓர் ஆதிசேடனையும் உலகத்தை விளக்குவதற்கு அதனைப் 'படைத்த' ஒரு கடவுளையும் நாம் கற்பனை செய்து கொள்ள வேண்டியிருப்பதை இங்கு நினைவு படுத்திக் கொள்ளலாம். கடவுளுக்கு நாம் இன்னது இனியது நல்லது என்று எண்ணுகின்ற குணங்களையெல்லாம் ஏற்றிக் கூறுவது போன்று ஈதருக்கும் ஒளி, வெப்பம், காந்தம், மின்சாரம் போன்ற ஆற்றல்களைக் கடந்தும் பல பண்புகளெல்லாம் இருப்பதாகக் கூறி வந்தனர். இன்று

கடவுள் என்ற தத்துவத்தின் துணையின்றி உலக நிகழ்ச்சிகளைப் பகுத்தறிவாளர்களால் புரிந்துகொள்ள முடிகிறது. அவ்வாறே ஈதர் என்ற கற்பனை இடையத்தின் துணையின்றியே அலையியக்கம் நிகழ்ந்து கொண்டிருப்பதை அறிவியலாரால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆதிசேடன் அல்லது கடவுள் இல்லையென்றால் உலகம் இல்லை என்ற கொள்கையின் பிடியிலிருந்து விடுபட முடியாதவர்களே இன்று ஈதர் போனதால் அலையொளிக் கொள்கையும் போய் விட்டது என்று பேசுகின்றனர். ஈதர் என்ற கற்பனைக் கடவுள் கை விடப்பட்டது உண்மையே, ஆனால் அலைத்தத்துவம் அழியாமல் இயங்கித் கொண்டுதான் இருக்கிறது!

ஒளியும் வெப்பமும்

இருந்தாலும், ஒலியலைக் கொள்கையை அப்படியே கொண்டு பார்க்கும் போது சில நிகழ்ச்சிகளுக்கு விளக்கம் தர முடியவில்லை என்பதை அறிவியலார் கண்டனர். ஒளிக்கும் வெப்பத்திற்கும் தொடர்புண்டு என்பதை மின்சாரக் குமிழ் ஒன்றைத் தொட்டுப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். ஒளி ஓர் உலோகத்தின் மீது தாக்கும் போது எலக்ட்ரான்கள் துள்ளி வெளியேறுகின்றன. மேலும் மிகுதியான ஒளி பாய்ந்து தாக்கினால் வெளியேறும் எலக்ட்

### அளவைகட்கும் ஆண்டவன் பெயர்!

நம் முன்னோர் தாங்கள் பயன்படுத்திய அளவைகட்குக் கூட ஆண்டவன் பெயரினை இட்டு வழங்கியதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

மலைகுனிய நின்றான் கல்
திருவேகம்ப நாழி
திருவரங்கதேவன் நாழி
ஆடவல்லான் மரக்கால்
தட்சிணமேரு விடங்கன் காசுக்கல்

என்பன சில அளவைகளின் பெயர்கள்.

— ஈரோட்டுக் கிழார்.

ரான்களின் வேகம் மிக வேண்டுமேயன்றி, எண்ணிக்கை மிக முடியாது! இங்கு அலையொளிக் கொள்கையில் சிறிது மாற்றதை உருவாக்க வேண்டிய நிலை வந்தது."

மாக்சு பிளாங்கு (Max plank) என்பவர் ஒளி தொடர்ச்சியாகப் பரவுவதில்லை, மாறாக, ஆற்றல் தொகுதித் துண்டுகளாகப் (packcts of Energy) பரவுகிறது என்ற கருத்தைத் தெரிவித்திருந்தார். இந்தத் துண்டுகள் மிகவும் சிறிது தாம், இருந்தாலும் தொடர்ச்சியாக இல்லாது தனித்தனியாக உள்ள துண்டுகளே! அதிகமான ஒளியில் அதிகமான ஆற்றல் உள்ளதால் அதிக எண்ணிக்கையுள்ள எலக்ட்ரான்களைத் துள்ளி வெளியேறச் செய்கிறது என்ற விளக்கத்தை இப்புதிய கொள்கையால் தீர முடிந்தது. மேலும் ஒளிக்கும், வெப்பத்திற்கும் உள்ள உறவையும் இநீத 'ஒளியாற்றல் தொகுதித் துண்டுக் கொள்கைக், (Quantum theory of light) நன்கு விளக்கியது.

*வாய்ப்பு அலை!*

மேலோட்டமாகக் காண்பதற்கு இது ஒரு வகையில் நியூட்டனின் 'துகளொளிக் கொள்கை' போன்று தோன்றும் இருந்தாலும், இக் கொள்கையும் 'ஒளியாற்றல் தொகுதித் துண்டுகள்' (quanta) தொடர்ந்து மாறி மாறி மிகுகின்ற வாய்ப்பு' பற்றியும், குறைகின்ற வாய்ப்பு பற்றியும் கூறுவதால், நாம் கற்பித்து வந்த அலை பொருள் 'வாய்ப்பு அலை'யாகச் செயல் பட்டு வருவதை ஏற்கிறது.

இன்று ஓர் எலக்ட்ரானையோ அணுவையோ அல்லது வாய்ப்பு அலையையோ, நாம் எப்படிக் கற்பனை செய்து கொள்கிறோம் என்பது பற்றி யாரும் கவலை கொள்ள வேண்டியதில்லை. கடல் நீரை அலைகளின் தொகுதியாகவும் கொள்ளலாம்: மாறாக, அலையினை நீர்த்துளிகளின் தொகுதியாகவும் கொள்ளலாம்! அணுவின் பழங்கால உருண்டை உருவம் பிடிக்காவிட்டால் அணுவினை அலைகளின் செறிந்த திரட்சி என்று கொள்வதில் தவறொன்றுமில்லை எப்பொருளும் அலைகளால் ஆனவை என்று ஏற்பட்டு விடுகிறது! எனவே, அலையொளிக் கொள்கை கைவிடப்பட்டு விட்டது என்று பேசுவதும், இன்றைய 'ஆற்றல் தொகுதித்துண்டுக் கொள்கை'யில் நியூட்டனின் துகளொளிக் கொள்கை கோவில் கொண்டு கொலுவீற்றிருக்கிறது என்று பேசுவதிலும் பொருள் இல்லை: நாம் அலைகளாலான உலகத்திலே, துகள்களாலான உலகத்திலோ, ஆல்லது அலைத்துகள்களாலான ஓர் உலகத்திலோ வாழ்ந்து வருவதாக எண்ணிக் கொள்வதை யாரும் மறுத்து விடமுடியாது.

*

---

கட்டுரை ஆசிரியர் தமிழிலும், அறிவியலிலும் பட்டம் பெற்றவர் மாநிலக் கல்லூரியில் தமிழ் பேராசிரியராகப் பணியாற்றுகின்றார்!

# சொல்லாக்கம்

Er. கொடுமுடி ச. சண்முகன், B.E., D.S.S., A.M.I.E.

நுட்பச் சொற்கள் ஆக்குவது தனிக்கலை. அதற்கென சில வழி வகைகள் உண்டு.

ஒவ்வொரு மொழியிலும் பல சொற்கள் தோன்று தொட்டு வழங்கி வருகின்றன. ஒரே சொல்லுக்கு ஒவ்வொரு காலத்திலும் ஒரு பொருள் விதம் பல பொருள் வழங்குவதுண்டு. ஒரே சொல்லுக்கு ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு பொருள் வழங்கும். அறிவியல் பாடத்திற்கு சொல்லிற்கேற்ற மாறுத பொருள் தேவை. அதனல் ஒவ்வொரு சொல்லிற்கும் தகுந்த பொருள் அடைவு தரவேண்டும். ஒரே சொல் ஒவ்வொரு அறிவியல் பிரிவிலும் ஒரு பொருள் அடைவு பெறும். ஆங்கிலத்தில் ஒரே சொல் ஒவ்வொரு பாடத்திற்கும் ஒவ்வொரு பொருள் கொண்டிருப்பதைக் காணலாம்.

எனவே தமிழ்ச் செ ல்லாக்கத்திற்கும் கீழ்க் கண்ட விதிகளைப் பின்பற்றலாம்.

1. ஆங்கில வேர்ச் சொல்லிலிருந்து வளர்ச்சி இருப்பது போல தமிழிலும் வேர் சொல்லிலிருந்து வளர்ச்சியோடு அமைத்தல் வேண்டும்.

Photo — ஒளி
Photograph — ஒளிவரை
Photography — ஒளிவரையம்
Photographer —ஒளிவரைவர்
Photo Electric Cell — ஒளிமின்கலம்
Photo Synthesis — ஒளிச்சேர்க்கை
Photometer — ஒளி அளவி
Photo technic — ஒளி நுட்பம்

---

19-2-71 அன்று கிண்டி, பொறியியற் கல்லூரித் தமிழ் மன்றம் நடத்திய அறிவியலை நோக்கி' கருத்தரங்கில் வாசித்த எழுத்துரையின் சுருக்கம்.

2. ஒருசொல் அமைக்கும் போது அதன் தொடர்புடைய பல சொற்களைத் திரட்டி வேறுபாடு புலனாகும்படி அமைத்தல் வேண்டும்.

Technic — நுட்பம்
Technician — நுட்பர்
Technology — நுட்பவியல்
Technologist — நுட்பவியலர்
Technocrat — நுட்பாளுநர்
Technical Terms — நுட்பச்சொற்கள்
Polytechnic — பன்னுட்பியம்
Monotechnic — ஒரே நுட்பியம்

3. ஒரு முன் இணைப்போ, பின் இணைப்போ பல இடங்களுக்குப் பொருந்துமாறு அமைத்து சீர்மை (Uniformity) க்கு முதலிடம் தரவேண்டும்.

வேர்ச் சொற்கள்

Geo — புவி
Bio — உயிர்
Archeo — தொல்
Paleo — பழைய
Tele — தொலை
Micro — நுண்
Petro — பாறை

பின் இணைப்புகள்

Logy — இயல்
Meter — அளவி
Metry — அளவையம்
Graph — வரை
Graphy — வரையம்
Scope — நோக்கி



எழுத்துரை ஆசிரியர், கிண்டி, அழகப்பர் நுட்பவியல் கல்லூரியில் பல்கலைக் கழகப் பொறியாளராகப் பணியாற்றுகிறார்.

4. ஆங்கிலச் சொற்களை அடிப்படைச் சொற்களாக எடுத்துக் கொண்டு தமிழ்ச் சொற்களை அவற்றிற் கொப்ப அமைத்தல் நல்லது.

# ஊரும் பேரும்

தமிழ் நாட்டில் பல ஊர்களின் பெயர்கள் காலப் போக்கில் மாறிவிட்டன. சில ஊர்களின் பழைய பெயர்களும், தற்போதைய பெயர்களும் கீழே தரப்பட்டுள்ளன. இவ்வூர்களைப் பற்றிய தனிக் கட்டுரைகள் அவ்வப் போது வெளிவரும்.

| | | |
|---|---|---|
| ஆரைக்கல் | — | நாமக்கல் |
| கரையூர் | — | கொடுமுடி |
| தகடூர் | — | தர்மபுரி |
| செங்கமலப்பள்ளி | — | செங்கப்பள்ளி |
| பொழில் வாய்ச்சி | — | பொள்ளாச்சி |
| குளிர் தண்டலை | — | குளித்தலை |
| இராசராசபுரம் | — | தாராபுரம் |
| பெரும் பழனநல்லூர் | — | பெருமா நல்லூர் |
| சூரலூர் | — | சூலூர் |
| குழாம் நிலை | — | கொளா நல்லி |
| துடுப்பூதி | — | துடுப்பதி |
| புன்றுறை | — | பூந்துறை |

— **ஆசிரியர்**

Hydrology — நீரியல்
Hydraulics — நீரியம்
Hydrostatics — நீர்நிலையியம்
Dynamics — இயங்கியம்
Mechanics — எந்திரவியம்
Physics — இயல்பியம்
Chemistry — இயைபியம்
Polytechnic — பன்னுட்பியம்.

குறிப்பு: இயல் என்ற சொல் அறிவியல் பாடப் பகுதியைக் குறிக்கும் சொல்லாக இருந்த போதிலும் ஆங்கிலத்தில் logy என்று முடியாத் இடத்தில் இயல் என்று முடியாதவாறு அமைத்தால் குழப்பம் குறையும்.

5. கிட்டத்தட்ட ஒரு பொருளுடைய பல சொற்களுக்கு இணையான சொற்களைத் தேடி இடுகுறியாக நிர்ணயிக்க வேண்டும்

| | |
|---|---|
| Board | வாரியம் |
| Council | மன்றம் |
| Committee | ஆயம் |
| Commisson | ஆணைக்குழு, ஆணையம், |
| Corporation | பேராயம் |
| Society | சங்கம் |
| Federation | கூட்டணி |
| Confederation | பெருங்கூட்டணி |
| Institute | கழகம் |
| Establishment | நிறுவனம் |

6. ஒரு அறிவியல் பாடத்தை எடுத்துக் கொண்டால் அதில் வரும் சொற்களை ஒன்று திரட்டி, அவைகளுக்கேற்ப முறைப்படுத்தி அமைத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| Load | எடை |
| Live load | நகர் எடை |
| Dead load | நகரா எடை |
| Distributed load | பரவு எடை |
| Uniformly Distributed load | சீர் பரவு எடை |
| Load due to impact | உதைய எடை |
| moving load | இயங்கும் எடை |

7. பெயர்ச் சொற்களை (Proper Nouns) அப்படியே எழுத்துப் பெயர்த்து எழுதலாம்.

எழுத்துப் பெயர்த்து எழுதும் போது தமிழ் முறைக்கு ஏற்ப சிறிதளவு மாற்றம் செய்து கொள்ளலாம். ஆனால் தமிழில் எழுதிய பின் படித்தால் ஆங்கில மூல உருவம் புலனாக வேண்டும். மூல உருவம் புலனாகாத அளவு உருமாற்றம் செய்தால் நன்மை தராது,

Toriselli — டாரி செல்லி

Diesel — டீசல்

Volt — ஒல்ட்டு

Amphere — ஆம்பியர்

தற்போது மூன்றும் வகுப்பிலிருந்து ஆங்கிலம் கற்றுத் தருவதால் ஆங்கிலம் அறியாத தமிழர் இனி இரார். எனவே மூலச் சொல்லை ஒரு தடவை ஆங்கிலத்தில் தெரிந்துகொண்டால், தமிழில் எழுதிய சொற்களையே ஆங்கில உச்சரிப்போடு படிக்கும் பழக்கமே இருக்கும்.

8. நல்ல சொல் கிடைக்காதவரை ஆங்கிலச் சொற்களை ஆங்கில எழுத்தோடு அப்படியே கையாளலாம்.

9. இயன்றவரை வடமொழிச் சொற்களை பயன்படுத்தாமை வேண்டும்.

கட்டுரை எழுதுமுன் சொற்களை கண்டுபிடிக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. எழுத, எழுத நல்ல சொற்கள் பிறக்கும் பழகப் பழகச் செப்பமுறும். ஏராளமாக எழுத வேண்டும், அப்போதுதான் நல்ல சொற்களைத்தேர்ந்தெடுக்கமுடியும். தொடக்கத்திலேயே சொற்களை நிலைவு (Standardise) செய்ய வேண்டியதில்லை. பல சொற்கள் பிறக்க வழிவிட்டு நல்லதைத் தேர்ந்தெடுக்கலாம்.



சிறுவர்அரங்கம் :

## முத்து

நல்ல நல்ல முத்து
　　நமது நாட்டு முத்து
வல்ல மேற்கு நாட்டார்
　　வாங்கிச் சென்ற முத்து.

கொற்கை தந்த முத்து
　　கொள்ளை அழகு முத்து
பொற்கைப் பாண்டி மன்னர்
　　போற்றி அணிந்த முத்து

தூத்துக் குடியின் முத்து
　　தூய்மை யான முத்து
பார்த்து அழகுப் பெண்கள்
　　பாங்காய்ச் சூடும் முத்து

புலவர் திருவரசன்

## மலைகள்

க. மணிமேகலை, M.A., B.Sc.

### 7. மலைகளும் கடலும்

இன்று காணப்படும் மலைகளெல்லாம் கடலின் அடியிலிருந்து மேல் வந்த நிலப் பகுதிகளே ஆகும். மலைகளினின்று கிடைக்கும் கடல்வாழ் உயிரினங்களின் கிளிஞ்சல்கள், சிப்பிகள், எலும்புகள், மற்றும் பல உயிரினங்களின் உடல்வடிவப் படிவுகள் எல்லாம் இக்கூற்றுக்குச் சான்றுகளாகும். வீட்டுத்தரைகளில் பரப்பப்படும் கடப்பைக்கற்கள் ஆறுகளால் கொண்டு வரப்பட்ட களிமண் துகள்கள் கடலினடியில் படிந்து மேலும் அமுக்கப்பட்டுக் கற்களாக மாறியவை என்றால் வியப்படைவீர்கள்!

இங்கிலாந்திலுள்ள மிகப்பெரும் சுண்ணும்புக் குன்றுகள் கடல் வாழுயிர்களின் எலும்புகளாலானவையே! நாம் உண்ணும் உப்பும் கடல் நீரினின்று கிடைப்பவையே. கடல் நீரில் உப்பு எப்படி வந்தது? ஆற்று நீர் பாறைகளிலிருந்து கனி உப்புக்களை அடித்துக் கொண்டு வந்து கடலில் சேர்க்கிறது. பின்பு அக்கடல் நீரினின்று பிரித்து எடுப்பதே நாம் உண்ணும் உப்பாகும். எனவே கடல் நீரிலிருந்து நாம் பயன் படுத்தும் உப்பானது மலைகளினின்று கொண்டு வரப்பட்டதே.

கடலிலுள்ள சிறு சிறு பூச்சிகளும் பாறைகளை உண்டாக்குகின்றன. இவைகளே பவழப்பாறைகள் (Coral reefs). பவழத் தீவுக் கூட்டங்களைப் பசிபிக் கடலிலும், ஆத்திரேலியாவின் மேற்குக் கடலிலும் காணலாம். தற்போது கிழக்கு மேற்கு நாடுகளை, பசிபிக்கடலில் இணைக்கும் இடமாக விளங்கும், அவாய்த் தீவுகள் (Hawai) இப்பவழப் பூச்சிகளால் உண்டானவையே. எனவே கல்லுக்கும் கடலுக்கும், நெருங்கிய தொடர்பு உண்டென்பது புலனாகும் மேலும் கடல்வாழ் உயிரினங்களையும், வாழ்ந்து மறைந்த உயிர்களையும் இப்பாறைகள் வாயிலாக அறிதல் முடிகிறது.

### 8. மலைகளின் பகைவர்கள்

மலைகட்கும் பகைவர்கள் உண்டென்பதை நீங்களறிவீர்களா? கதிரவனின் வெம்மை, காற்று, குளிர், நிலைத்திணைகள் (Plants and

trees) ஆகியவைகள் மலைகளின் வாழ்வைக் குலைக்கும் எதிரிகளே. கதிரவனின் நீடித்த வெப்பத்தால் வலிய பெரும் பாறைகள் வெடித்துக் கற்குன்டுகளாகிப்பின் சிறுகற்களாகச் சிதறுகின்றன. வலிய பேய்க்காற்று மலைப்பாறைகளின் வெளிப்பகுதியில் உராய்ந்து, உராய்ந்து பாறைகளைத் உருமாற்றுகின்றன. பாறைகளின் இடுக்குகளில் புகுந்த மழை நீர், மிகுந்த குளிரால் உறைந்து விரிவடைந்து மலைகளில் விரிசல்களையும், ஓட்டைகளையும் உண்டு பண்ணி உருமாறச் செய்துவிடுகிறது. நிலைத்திணைகளின் விதைகள் காற்றின் துணையால் மலைகளை அடைந்து முளைத்துச் செடியாகி மரமாகின்றன. மரத்தின் வலிமை பொருந்திய வேர்கள் பாறைகளைப் பிளக்கின்றன. இவ்வாறுகப் பல பகைவர்கள் இருந்த போதிலும், மலைகள் உயர்ந்து வானளாவி நின்று பகைவர்களை எல்லாம் எதிர்த்து நின்று, உலகில் வாழும் உயிர் இனங்கட்கெல்லாம் எதிர்பாரா உதவிகளைச் செய்து கொண்டே இருக்கின்றன.

[ தொடரும் ]

---

# ‘பல்லவர் காலக் கருத்தரங்கு’

பல்லவர் காலம் தமிழக வரலாற்றில் மிக முதன்மை வாய்ந்ததோர் காலமாகும். தேவாரம், திருவாய்மொழி மூலம் சைவமும் வைணவமும் செழித்தோங்கிய காலம். சிற்பமும் ஓவியமும் சீர் பெற்றுப் புதியனவாக மலைக்கோயில்களும், குகைக்கோயில்களும், கற்றளிகளும் எழுந்த காலம்.

இத்தகைய மாண்புமிக்க காலத்தில் தமிழகத்தின் பேரரசர்களாய் விளங்கிய பல்லவர் யார்? தமிழ்நிலத்தவரா? அயல் நாட்டவரா? கருத்துமாறுபாடு இன்னும் ஆரய்ச்சிக்குரியதாகவே இருக்கிறது.

இதன் பொருட்டு 23-5-71 அன்று பயிற்சி முகாமினர் உற்று நோக்கும் பொருட்டு “பல்லவர் காலக் கருத்தரங்கு” ஒன்றினுக்கு ஏற்பாடு செய்துள்ளனர். வல்லார் பலர் கருத்து வழங்குவர். இந் நன்முயற்சியைக் கொங்கு பாராட்டுகிறது!

---

# ஆயிரத்தெண்ணூறில் தமிழகம்

புக்கானன்

**நல்லராயன் பாளையம்**

இன்று காலை ஒன்பது நாழிகை வழி சென்று பவானி ஆற்றங் கரையின் மீதுள்ள நல்லராயன்பாளையம் என்ற சிற்றூரை அடைந்தேன், ஆற்றில் ஆழமான மடைகளும் சுழல்களும் நிறைய உள்ளன. மடைகளில் முதலைகள் நிறைய உள்ளன.

நான் சென்ற வழியில் ஒரு அழகான ஏரி நிறைந்து இருந்தது. ஏரிக்கால் பாசனத்தில் உழவடை நடந்து கொண்டிருந்தது. மலை களிலிருந்து பல அருவிகள் ஓடி ஆற்றை அடைந்தன.

அங்குள்ள விவசாயிகளை ஒன்று திரட்டி அவர்களிடமிருந்து நஞ்சைப்பயிர் விளைச்சலைப்பற்றித் தெரிந்துகொண்டேன். நெல் விளைச்சலுக்கு மழைநீர் மட்டும் போதாதாம்; கால்வாய் நீரோ, ஏரிநீரோ கூடப் பாய்ச்ச வேண்டுமாம், பவானி ஆற்றில் பனிரெண்டு மைலுக்குமேல் சத்திய மங்கலத்தில் ஒரு அணை இருக் கிறது. அணையிலிருந்து இரண்டு பக்கமும் இரண்டு கால்வாய்கள் வருகின்றன. தென் கரை கால்வாய் கோபிசெட்டிபாளையம் ஜில்லாவில் நிறைய நிலத்திற்கு பாசனம் அளிக்கிறது. வடகரையில் சத்தியமங்கலம் வழியாக வரும் இந்தக் கால்வாய் 1100 கண்டகம் நெல் வயலுக்கும் 132 கண்டகம் தோட்டக்காலுக்கும் தண்ணீர் தருகிறது. இங்கே கண்டகம் என்பது சுமார் 75600 சதுர அடி ஆகும். ஆண்டுக்கு ஒரு போகம் தவருமல் விளைகிறது. நல்ல பருவ காலத்தில் இரண்டு போகம் கூட விளைகிறது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நஞ்சையை ஒரு சாராரும், புஞ்சையை ஒரு சாராரும் பயிரிட்டு வந்தனர். பெரும்பாலும் பிராமணர்களே நஞ்சைப் பூமிக்கு சொந்தக்காரர்களாக இருந் தனர். திப்புவின் ஆட்சியில் நிலவரி உயர்ந்தபோது இவர்கள் நிலத்தை விட்டுவிட்டுப்போய் விட்டார்கள்.

(புக்கானன் அவர்கள் நெல் பயிரிடும் முறையை விரிவாக கூறுகிருர். அதை விடுத்து மேலே செல்வோம்.)

## அணைக்கோதாவரி

20 அக்டோபர் 1800

இன்று இருபத்திநாலு மைல் தூரம் சென்று நேற்று கண்ட கால்வாய்கள் பிரியும் அணைக் கோதாவரி என்னும் இடத்தை அடைந்தேன். இந்த அணை 120 ஆண்டுகளுக்கு முன்பு மைசூர் மன்னர் கந்தர் ராயர் மகன் நஞ்சராஜா கட்டியதாக சொல்லப் படுகிறது. இது ஒரு அருமையான வேலை, ஆனால் சுல்தான் ஆட்சி காலத்தில் நிறைய மண் சேர்ந்து மூடிக் கொண்டது. அண்மை யில் இதை சுத்தம் செய்திருக்கிறார்கள்.

கோதாவரி என்ற சிற்றூரைச் சுற்றி பெரும் பகுதி பயிரிடா மல் கிடக்கிறது. ஒரு காலத்தில் இவை நன்றாக விளையும் பூமிகளாக இருந்து ஜெனரல் மெடோஸ் படையெடுப்பில் அழிந்து போன தாக சொல்லப்படுகிறது. பின்னர் அடிக்கடி நடந்த படையெடுப்பு களால் பயிர் செய்ய ஆளின்றி தரிசாக கிடக்கிறது. இங்குள்ள மக்கள் படையெடுப்புக் காலங்களில் மலைகளின் மீது ஒளிந்து கொண்டும் பின்னர் சமவெளியிலும் வாழ்ந்து வந்தனர்.

தொடர்ச்சியாக பத்து கட்டிமுதலிகளின் வம்சாவளியினர் ஆண்டதாகவும், அவர்களை மைசூர் மன்னர் துரத்திவிட்டு தன் ஆட்சியில் கொண்டுவந்ததாகவும் சொல்லப்படுகிறது. வென்ற மைசூர்ப் பரம்பரையில் ஐந்தாவது மன்னர் சிக்க தேவராய உடையார்.

21-10-1800 அன்று சத்தியமங்கலம் வருகிறார். சத்திய மங்கலத்துச் செய்திகள் அடுத்த இதழில்.

# கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை

ஒரு நாட்டின் உண்மையான வரலாற்றை ஆராய்ந்தறியத் துணைபுரியும் சான்றுகளில் கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், புதைபொருள்களும் சிறந்தவையாகும். அந்த வரலாற்று மூலங்களைக் கண்டுபிடித்து, ஆராய்ந்தறிந்து வெளிப்படுத்தும் வல்லுநர்கள் மிகச் சிலரே இருக்கின்றனர்.

இக்குறையை நீக்கும் பொருட்டுத் தொடர்ந்து நற்பணியாற்றி வரும் தமிழ்நாடு அரசின் தொல்லியல் ஆய்வுத்துறை ஒரு "கல்வெட்டுப் பயிற்சி முகாம் ஏற்பாடு செய்துள்ளனர்.

கல்லூரிப் பேராசிரியர்களும், உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களுமாகத் தமிழகமெங்குமிருந்து 42 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு இப் பயிற்சியளிக்கப் படுகின்றனர்.

5-5-71 அன்று மாலை 5-30 மணியளவில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க்கோட்டமான குலோத்துங்க சோழ வளநாட்டு சென்னை மாநகர்ச் சைதையான கலைவளர்பகுதியில் ஆசிரியப் பெருமக்கள் பயில்கின்ற கல்லூரி அரங்கதனில் கல்வித் துறைதனையும் ஊராண்மைத் துறையதையும் புகழ் ஓங்க அமைச்சு ஓச்சும் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் அவர்கள் தொடங்கிவைத்தார்.

அப்பொழுது அமைச்சர் பெருமான் அவர்கள் "80000-க்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. ஆனால் அவற்றுள் ஆராய்ச்சியாளருக்கு எட்டியிருப்பவை 6000 கல்வெட்டுக்கள் தாம். மீதியுள்ள கல்வெட்டுக்களைப் படித்து வரலாற்றை வெளிப்படுத்த இக்கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை பயன்படவேண்டும். என்று என் ஆவலை வெளிப்படுத்தினார்கள்.

திரு. மா. பொ. சி அவர்கள் தமிழ்நாடு தொல்லியல் துறையின் பணிகளைப் பாராட்ட இயக்குநர் திரு. நாகசாமி அவர்களை "ஒரு அதிகாரிக் குரிய முறையில் அல்ல, உண்மையான ஆர்வமிகுந்த ஒரு கலைஞரைப் போலப் பணிபுரிபவர்" என்று பாராட்டினார். தொல்லியல் துறை இயக்குநர் திரு. நாகசாமி அவர்கள்

தன் வரவேற்புரையில் பள்ளிப்பாடத்திட்டங்களில் தமிழக வரலாற்றுப் பகுதி பாடமாகச் சேர்க்கப்பட்டிருப்பினும் பாட நூல் எழுதும் ஆசிரியர்கள் 'பிற வேண்டாத வரலாறுகளை விரித்தும் தமிழக வரலாற்றுச் செய்திகளை மிகச் சுருக்கமாகவும் எழுதியிருக்கும் போக்கினைச் சுட்டிக் காட்டினார்.'

விழாவின் இறுதியில் கல்வெட்டாய்வாளர் திரு. நடன. காசிநாதன் நன்றி நவின்றார்.

—நமது நிருபர்.

# சுற்றுலா

கல்வெட்டுப் பயிற்சிப்பாசறையில் பயிற்சி பெறும் ஆசிரியப் பெருமக்கள் 13-5-71 தொடங்கி 7 நாள் தமிழக மெங்கும் சென்று பல வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்களில் நேர் முகப் பயிற்சி பெறுகின்றனர்.

காஞ்சி, தஞ்சை, மதுரை, கங்கைகொண்டசோழபுரம், புதுக்கோட்டை போன்ற தலைநகர்களையும் மாமல்லபுரம், திருப் புறம்பியம், கொடும்பாளூர் போன்ற வரலாற்றுச் சிறப்பானஇடங் களையும், தில்லை, குடந்தை, திருவையாறு,திருப்பழனம், திரிபுவனம் போன்ற, தலங்களின் வானுயர்ந்த வளமார் கோயில்களையும், திருச்சி மலைக்குகை, சித்தன்ன வாசல், கீழவளவு, திருப்பரங் குன்று, ஆனைமலை போன்ற பழம்பெரும் தமிழ்க் கல்வெட்டு உள்ள பகுதிகளையும் காணும் முகாமினர் புதிய பயற்சியால் புத்தூக்கம் பெற்று மறைந்து இருக்கும் ஏராளமான வரலாற்றுச் செல்வங்களை வாரித்தொகுத்து தமிழ்ச் சமுதாயத்துக்கு அளிப்பர் என்பது திண்ணம்.

ஆசிரியர்

## வைப்புத் தலங்கள்

அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவராலும் பாடப்பட்ட பாடல்கள் தேவாரப் பாடல்கள் எனப்படும். தேவாரத்தில் அவ்வப்போது குறிப்பிடப்படும் ஊர்கள் வைப்புத் தலங்கள் எனப்படும். கொங்கு நாட்டு வைப்புத்தலங்கள் வருமாறு:

1. பேரூர், (கோவை அருகே)
2. குரக்குத்தளி (ஈரோடு வட்டத்தில் உள்ள பெரிய பாளையம்)
3. குளிர் அறைப் பள்ளி (கொல்லிமலை)
4. ஏழூர் (திருச்செங்கோடு அருகே)
5. தோழூர் (நாமக்கல் அருகே)
6. பூந்துறை (ஈரோடு வட்டம்)
7. சேவூர் (அவிநாசி அருகில்)

— கொங்கன்

# வேங்கல நாடு

கொங்கு மண்டலத்தின் உட்பிரிவுகளில் வேங்கல நாடு ஒன்ரு கும். கரூரைச் சுற்றியுள்ள கீழ்க் கண்ட பகுதிகள் இதில் அடங்கும்.

| | |
|---|---|
| புன்னம் | காசிபாளையம் |
| பவுத்திரம் | கோயிலூர் |
| நாகம்பள்ளி | வெஞ்சமாக் கூடல் |
| காளிக்குறிச்சி | ராமபுரம் |
| குப்பம் | பள்ளபாளையம் |
| தும்பிவாடி | வெங்கடாபுரம் |
| நெடுங்கூர் | நிமித்தம் பட்டி |
| கோயம் பள்ளி | ஆத்தூர் |

கரூர் பல காலங்களில் தலைநகரமாகத் திகழ்ந்துள்ளது. சேரர் களில் ஒரு பிரிவினரின் தலைநகரம் இது. இதுவே வஞ்சி என்றும் பல ஆய்வாளர்கள் கருதுகிருர்கள்.

வெஞ்சமாக் கூடல் தேவாரப் பாடல் பெற்ற ஊர். புகழியூர் சேரர் கல்வெட்டில் 'ஆத்தூர்' குறிக்கப்பட்டுள்ளது.

செம்மண் பூமியில் வெங்கங்கல் துண்டுகள் நிறைந்த பகுதி யாதலின் 'வெங்கங்கல் நாடு' என வழங்கி வேங்கல நாடு என மருவியதாகத் தோன்றுகிறது. 'வெங்கால நாடு' என்றும் ஊர்த் தொகைப் பாடல் கூறுகிறது.

கொடியன்

---



# கொங்கு

அறிவியல் வரலாற்றுத் திங்களிதழ்

26, இந்திரா நகர், சென்னை - 20.

## அடுத்த இதழ்

"கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை நிறைவு விழா"

சிறப்பு மலராக வெளிவரும்.

ஆசிரியர்: புலவர் செ. இராசு. அச்சிட்டவர்: து. இராஜலட்சுமி,
ரேணுகா பிரிண்டர்ஸ், L. B சாலை, சென்னை-20.
வெளியிட்டவர்: ச. பிரகதம்.
அலுவலகம்: 26, இந்திரா நகர், சென்னை-20